மலர் 6] [இதழ் 16

3—4—65

குரோதி ஆண்டு பங்குனி 21

"தமிழகம்" கிழமை இதழ்.

விலை – 10 காசுகள்.

# தமிழகம்

சிறப்பாசிரியர் தவத்திரு குன்றக்குடி அடிகளார்






<u>அப்பர் விருந்து</u>

## அமர நிலை பெற

மனிதப் பிறவி விழுமியது—மிகச் சிறந்தது—பெருமையுடையது. எனினும், அப்பிறவியைப் பாவங்கள் பற்றிநிற்கும். அந்தப் பாவங்களை அழித்தொழிக்க வேண்டாமா?

நிலைபேறுடைய — அமரநிலையை எய்துதற்குரிய தன்மையைப் பெறவேண்டாமா?

நம்மைச் சுற்றிச் சூழ்ந்து வருகின்ற இருவினைகளையும் சுட்டெறிக்க வேண்டாமா?

ஆம், பற்றிநின்ற பாவத்தை அழித்தொழிக்கத்தான் வேண்டும்!

அமரநிலை எய்துதற்குரிய தன்மையைப் பெறத்தான் வேண்டும்.

சுற்றிச் சூழ்ந்து வருகின்ற இருவினைகளையும் சுட்டெரிக்கத்தான் வேண்டும்.

இதற்கு என்னவழி? அதை அப்பரடிகள் கூறுகிறார். தன் நெஞ்சுக்குக் கூறுவார்போல, இத்தரணியில் சஞ்சலமுறும் மக்கட் சமுதாயத்திற்குக் கூறுகிறார். அவர் கூறுவதைக் கேளுங்கள்:

இலட்சிய சாதனைக்கு எப்பொழுதும் விழிப்புணர்வு தேவை; கண் விழிப்பு மட்டுமல்ல; வாழ்க்கையின் படிகளும்—பிரதிபலிப்புகளுமாகிய சிந்தனை—உணர்ச்சி ஆகியவற்றிலும் விழிப்பாக இருக்கவேண்டும். கடவுளைக்கண்டு பயப்படக் கூடாது. உறவு நெறி வழிப்பட்ட உற்றவராகக் கருதுதல் வேண்டும். உறுதுணையாகவும் கொள்

(8-ஆம் பக்கம் பார்க்க)

# வாழ்விக்க வந்தோர் வரலாறு

## 37. திருநாவுக்கரசர்

அப்பரடிகள் பூம்புகலூர்ப் புனிதர் மலர்த்தாள் வணங்கி நாள்தோறும் உழவாரத் தொண்டு புரிந்து வந்தார். அங்கு அவர், ''நின்ற திருத் தாண்டகமும், நீடுதனித் தாண்டகமும், மன்றுறைவார் வாழ்பதிகள் வழுத்து திருத்தாண்டகமும், கொன்றை மலர்ச் சடையார்பால் குறைந்த திருநேரிசையும், தூன்று தனிநேரிசையும், ஆருயிரின் திருவிருத்தம் தசைபுராணத் தடைவும், பார் பரவும் பாவநாசப் பதிகமும் நேர்பட நின்று அறைகூவுந் திருப்பதிகம் முதற்பிறவும் பாடிப் பாடிப் பேரருளின் கடல் அளிக்கும் பெருமானைப் பரவினர். இவ்வாறு பாடிப் பரவி வருநாளில், அப்பரடிகளின் நன்னிலைமையை அவனிக்குக் காட்டத் திருவுளங் கொண்டார் செஞ்சடையண்ணல். ஆண்ட அரசாம் நம் அப்பரடிகள் புல் செதுக்கும் போது, உழவாரப் படை நுழைந்த இடங்களிலெல்லாம், பொன்னினொடு நவமணிகள் பொலிந்திலங்க அருள் செய்தார். ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்கும் உள்ளமுடையார் அன்றோ நம் உழவாரப் படையாளி. அவர் என்ன செய்தார் தெரியுமா? ''புல்லோடும், கல்லோடும், பொன்னோடும் மணியோடும் சொல்லோடும் வேறுபாடில்லா நிலைமை''யில், பொன்னையும் நவமணியையும் பருக்கைக் கற்களோடு உழவாரத்தில் ஏந்தி, 'வம்பலர்மென் பூங்கமல வாவியினில் புக எறிந்தார்.''

திருப்புகலூர் நாயகனாரின் திருவுள்ளம் இத்தோடும் அமையவில்லை. நாயகனார் திருவருளால், 'வில்லோடு நுதல் மடவார்' 'வானகமின்னுக் கொடிகள் வந்திழிந்தால் என' 'விண்ணினின்றிறங்கி வந்து, 'கானஅமுதம் பரக்கும் கனிவாயில் ஒளிபரப்ப உண்கண்கள் பாயும் ஒளிபரப்பப் பாட்டாலும் கூத்தாலும் இன்னபிற வற்றாலும் அப்பரடிகளின் நிலையைக் குலைக்க முயன்றனர். அரம்பையர்தம் ஆடலையும் பாடலையும் அருங்கவிச் சேக்கிழார் மிக அழகாகப் பாடுகிறார்:

ஆம்.

''கற்பகப்பூந் தளிரடிபோங்
காமருசா ரிசைசெய்ய
உற்பலமென் முகில்விரல்வட்
டணையோடும் கைபெயரப்
பொற்புறும்அக் கையின்
வழிப்
பொருகயற்கண் புடை
பெயர
அற்புதப்பொற் கொடி
நுடங்கி
ஆடுவதுபோல் ஆடுவார்;',

இதுமட்டுமா? இல்லை.

''ஆடுவார் பாடுவார்;
அலர்மாரி மேற்பொழிவார்
கூடுவார் போன்றணைவார்
குழல்அவிழ இடைநுடங்க
ஓடுவார் மாரவே
ளுடன்மீள்வார்; ஒளிபெருக
நீடுவார் துகில்அசைய
நிற்பாரும் ஆயினர்.''

இந்நிலையிலும் அப்பரடிகளின் சித்தம் சிறிதும் சிதறவில்லை. 'அத்தனார் திருவடிக்கீழ் நினைவகலா அன்புடைய—மெய்த் தன்மை உணர்வுடைய விழுத் தவத்து மேலோர்' அன்றோ? அவர் 'செய்பணியின் தலைநின்று, 'பொய்மாயப் பெருங் கடலுள்' என்னுந் திருத் தாண்டகத்தைப் பாடியருளினார். ''உம்மால் இங்கென்ன குறை? உடையேன் நான்? திருவாரூர் அம்மானுக் காளானேன்: அலையேன்மின் நீர்'' என்றருளினார். அரம்பையர்களும் அப்பரடிகளுக்குச் சிவமாகவே காணப்பட்டார்கள். அவர்கள் அனைவரும் அப்பரடிகளை இறைஞ்சி அகன்றனர். உலகம் உய்யவந்த அப்பரடிகளை உலகேழும் வாழ்த்தின.

அன்புறு பத்தி வடிவாயிலங்கும் அப்பரடிகள், ''தன்னுடைய சரணான தமியேனைப் புகலூரன் என்னையினிச் சேவடிக் கீழ் இருத்திடும்'' என்றெழுகின்ற திருவிருத்தங்களைப் பாடினார் சித்திரையில் சதயத் திருநாளில் 'புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன்' எனப் புகன்று நம் தொண்டின் சீலர், நண்ணரிய சிவானந்த ஞான வடிவேயாகி அண்ணலார் தண்ணார் சேவடிக் கீழ் அமர்ந்தார்.

சித்திரை சதயம் அப்பரடிகள் திருநாள். தொண்டின் நெறிநின்று சமயம் வளர்த்து தூய தொண்டின் சீலர் அப்பரடிகள் திருநாளைச் சைவத் தமிழ் உலகம் தொண்டு நாளாக -- அந்த வாரத்தைத் தொண்டுவாரமாகக் கொண்டு தமிழகத்தில் மீண்டும் பழைய தொண்டு வழிபட்ட சமய நெறியை வளர்க்க முற்படுவோமாக!

(முற்றும்)

குடியாட்சி வளர்ந்த வரலாறு:

# பண்டைய குடியாட்சி முறைகள்

ஓர் நாட்டில் வாழும் மக்களுடைய பண்பாடும், மனப்பான்மையும்தான், அவர்களால் நிறுவப்படும் ஆட்சி வகையிலும் பெரிதும் காணப்படும் என்ற உண்மைக்கு எடுத்துக்காட்டாகப் பண்டைய இத்தாலியின் குடியினராகிய சபைன்கள், லத்தீன்கள் (அல்லது ரோமானியர்கள்) ஆகியோருடைய மன இயல்புகளில் சிலவற்றைக் குறிப்பிட்டோம். இங்கு அவற்றை மேலும் விரித்துரைத்துப் பின்னர் அவர்களுடைய ஆட்சி வகைகளைப் பற்றிக் கூறுவோம்.

அரசாங்கத்தின் எல்லா அதிகாரங்களுக்கும் மூலாதாரமாக இருப்பது அவ்வரசாங்கத்தின் கீழ் வாழும் குடிமக்களுடைய ஆதரவே, என்ற அடிப்படையான குடியாட்சிக் கருத்து ரோமானியருக்கும் கிரேக்கத்தில் வாழ்ந்த அதீனியருக்கும் பொதுவான ஒன்றே. எனினும், அதீனியர் ஏற்படுத்தியதைப் போன்ற குடியாட்சி முறையை ரோம் நகரரசில் ரோமானியர் நிறுவவில்லை என்பதை ரோமானிய அரசியல் வரலாறு நமக்குக் காட்டுகிறது. மக்களே அரசாங்கத்தினுடைய அதிகாரத்துக்கு மூலாதாரம் என்ற கொள்கையினடிப் படையில்தான் ரோம் நகரரசின் அரசியலமைப்பு தொடக்கத்திலிருந்தே இருந்தது. முதலில், அதாவது அந்த நகரரசு நிறுவப்பட்டதாகக் கொள்ளப்படும் கி. மு. 753-ம் ஆண்டிலிருந்து, கி. மு 510-ம் ஆண்டு வரை ரோம் முடியாட்சி ஆக இருந்தது; கி. மு. 510-ம் ஆண்டிலிருந்து கி. மு. 44-ம் ஆண்டுவரை அது குடியரசாக (ரிபப்ளிக், Rupublic) இருந்தது. பின்னர் அது கி. பி. ஐந்தாம் நூற்றூண்டின் நடுவில் மறையும் வரை மீண்டும் குடியாட்சியாக இருந்தது. எனவே குடியாட்சி முறைக்கு ஏற்ற கருத்துக்கள், நிறுவனங்கள் செயல் வகைகள்

பேராசிரியர்
பா. சூரியநாராயணன்

ஆகியவை ரோம் நகரரசின் இந்த மூன்று வகைப்பட்ட ஆட்சிகள் நடைபெற்ற காலங்களில் எவ்வளவில் தோன்றி, வளர்ந்து செயல்பட்டன என்பதை நாம் காணவேண்டும்.

ரோமானியர் வீர உணர்வும், பயிர்த்தொழிலில் ஈடுபாடும், சமயப் பற்றும் உடையவர்களாக இருந்தமையால் கிரேக்கரைப் போன்று, எல்லாக் குடிமக்களும் பங்கு எடுத்துக்கொள்ளக்கூடிய நேரடியான குடியாட்சி முறையையோ தங்களுக்கு நிறுவிக்கொள்ளுதல் வேண்டும் என்ற கருத்தும், விருப்பமும் இன்றி இருந்தனர்; தங்களுடைய நாட்டுக்குத் திறமையும் பொறுப்பும் உள்ள ஆட்சியாளர்களைக் குறிப்பிட்ட கால அளவுகளுக்கு அமர்த்தி, அவர்களின் மூலமாகத் திறமான ஆட்சியைப் பெறுவதையே அவர்கள் விரும்பினர்.. கிரேக்கத்தில் அதீனியரோ, ஆட்சியின் தரமும், ஆட்சியாளரின் திறமும் எவ்வளவுதான் பாராட்டத்தக்கதாக இருந்தபோதிலும், ஆட்சியிலே குடிமக்கள் எல்லோருக்கும் பங்கு இருத்தல் வேண்டுமென்று கருதினர். ரோமானியர், ஆட்சியில் எல்லாக் குடிமக்களுக்கும் பங்கு இருத்தல் வேண்டுமென்ற விருப்பம் கொள்ளாமல், குடிமக்களால் வரையறை செய்யப்பட்ட கால அளவுகளுக்குத் திட்டவட்டமான அதிகாரங்களோடும், பொறுப்புகளோடும் ஆட்சியாளர் அமர்த்தப்படுதலே நன்று என்று விரும்பினர்; இவ்வகையாகப் பார்க்கும்போது, ரோமானியர் அதீனியரைப் போன்று தீவிரமான குடியாட்சிக் கோட்பாடு உடையவரல்லர் என்றும், திறமான ஆட்சியையே பெரிதும் விரும்பினர் என்றும், அதீனியரைப் போன்று அவர்கள் கலை வளர்ச்சி, வாணிபம் முதலியவற்றில் ஈடுபட்டு முற்போக்கு உடையவர்களாய் இல்லாமல், வேளாண்மையில் நாட்டமுடையவர்களாய்ப், பழைமை விரும்பிகளாகவே (Conservative) இருந்தனரென்று நாம் அறிகிறோம்.

இத்தகைய ரோமானிய மனப்பான்மை எவ்வாறு அவர்களாலமைக்கப்பட்ட ஆட்சி வகைகளில் காணப்பட்டது என்பதை ஏ. எப். ஹாட்டர்சிலி என்ற ஆசிரியர் சுருக்கமாகக் கூறுகிறார்.

(1) ஆட்சி அதிகாரத்தை எந்த நோக்கங்களின் பொருட்டு அலுவலர் கையாளுதல் வேண்டுமோ, அத்த

(5ஆம் பக்கம் பார்க்க)

# தமிழகம்

அன்பாலே மக்கள்குலம் இணைந்து வாழும்
அருள்நெறியைப் பரப்புதலே எங்கள் நோக்கம்

மலர் 6] 4—3—65 [இதழ் 16


## தொண்டு வாரம்

தமிழகம் வரலாற்றுப் புகழ் படைத்த நிலவகம். மனித குலத்தை நன்மை பெருகு அருள்நெறியில் செலுத்தி வாழ்விக்கும் சிறந்த அருளாளாளர்கள் தோன்றியநிலவகம். புத்துலகச் சிந்தனை—தமிழகத்திலேயே முந்தித் தோன்றியது. இருபதாம் நூற்றுண்டின் சிந்தனைகளென போற்றப்படும் ஒருமைப்பாடு, சகவாழ்க்கை — பிறர் வாழத் தொண்டு செய்தல்-குடிதழுவிய ஆட்சி ஆகியவைகளை ஏழாம் நூற்றுண்டிலேயே எடுத்துக்காட்டிய பெருமை அப்பரடிகளுக்கு உண்டு. உலகில் மானிட சமுதாயத்தின் நீண்ட நெடிய நல்வாழ்வுக்காக சிந்தனை செய்து, பணிசெய்த சான்றோர் தம் வரிசையில் அப்பரடிகளுக்குத் தக்க இடம் உண்டு.

அப்பரடிகள் கடவுள் நம்பிக்கையுடையவர்—அவரைப் பாடுதலும் பரவுதலுமே உய்திக்குரிய உயரிய நெறி என்று உணர்ந்து உணர்த்தியவர். சமயத்தின் பேரால் பொருளற்ற சடங்குகளை அப்பரடிகள் ஆதரிக்கவுமில்லை—ஊக்கப்படுத்தவுமில்லை. மாறுக, கடிகின்றார் பூவும் நீரும் தந்து, பண்கலந்த பைந்தமிழ்ப் பாடல்களால் பாடி அழுது தொழுதலே பரமன் அருளைப்பெறும் வழிபாடு என்று வழிகாட்டினர். சமயத்தின் பேரால், எண்ணத் தொலையாத சாதிவேற்றுமைகள் முளைத்துக் கிளைத்திருந்ததைச் வன்மையாகச் சாடினர். கோத்திர, குல வேறுபாடுகளைக் கடந்த ஒருகுல அமைப்பை வற்புறுத்திய சமயத் தலைவர் அப்பரடிகள்.

அப்பரடிகள் நல்ல தமிழ்ப் பற்றுடையவர்—தனித்தமிழ் இயக்கத்தின் தலைவர்—தமிழிசை இயக்கத்தின் தந்தை. அவருடைய திருமுறைப் பாடல்கள் பல்சுவையும் நிரம்பியன. இறைவனே விரும்பிக் கேட்ட இனிய பாடல்கள். தமிழ்ப் பற்றை தமிழ் வளர்ச்சி இயக்கமாக நடத்திய பெருமை அப்பரடிகளுக்கு உண்டு. திருத்தலப் பெயர்கள், இறைவன் இறவியின் பெயர்கள் ஆகியவற்றைத் தமிழ்ப் படுத்திப் பாடிய தமிழ்த் தலைவர் அப்பரடிகள்.

அப்பரடிகள் சிந்தையைச் சிவத்துக்குத் தந்தவர்—அறிவாற்றலை அமிழ்தினும் இனிய அரிய மறைப் பாடல்களைத் தருவதற்குப் பயன்படுத்தியவர். உடலியல் ஆற்றலை திருத்தொண்டின் நெறிவளரப் பயன்படுத்தியவர். திருக்கோயில் கட்டிடக் கட்டுப் கோப்புக்கு இடையூறாக—தன்னிச்சையாக முளைத்தெழும் செடிகொடிகளை உழவாரம் தாங்கிய திருக்கரங்களால் அகற்றித் திருக்கோயில்களைக் காப்பாற்றிய தொண்டு நெறி வல்லார். மற்றும், பிறிதின் நோய் தன் நோய் போற் கருதிப் பசித்துன்பம் போக்குதல், மரணத்தினின்றும் விடுதலை செய்தல் ஆகிய தொண்டுகளையும் இந்த உலகியல் சீராக அமைய மனிதகுலம் நல்வாழ்க்கை வாழச் செய்த பெருந்திருவாளர். இத்தகு அப்பரடிகளை வழிகாட்டும் ஞானசிரியராகக் கொண்ட அருள்நெறித் திருக்கூட்டத்தினர் புண்ணியம் செய்தவர்கள் என்பதற்கு ஐயமேது? அருள்நெறித் திருக்கூட்டம் சமுதாயம் தழுவிய சமய நெறியைக் காணவும், கோயிலுக்கும் குடிசைக்குமிடையேயுள்ள தூரத்தைக் குறைக்கவும் அப்பரடிகள் காட்டிய நன்மை பெருகு அருள்நெறி வழியில்—திருத்தொண்டின் நெறியில் நடைபயில்கிறது.

வருகிற சித்திரைத் திங்கள் 14-ம் நாள் (26-4-65)ல் அப்பரடிகள் திருநாள் வருகிறது. இவ்வாண்டு அப்பரடிகள் திருநாளைத் தொண்டின் வாரமாகக் கொண்டாடி, சோர்ந்த இதயத்தில் சுறுசுறுப்பும், வலிவும் வனப்பும் பெற அருள்நெறித் திருக்கூட்டத்தினரும் மற்றும் நண்பர்கள் ஆதரவாளர்கள் அனைவரும் முயற்சிக்க வேண்டும் என்பதே நமது விருப்பம். — அடிகளார்

(3ஆம் பக்கத் தொடர்ச்சி)

கைய நோக்கங்களை நிறைவேற்றும் பொறுப்பையும், அதற்குரிய அதிகாரத்தோடு இணைத்து (Union of authority and responsibility), இரண்டையும் ஆட்சி அலுவலரிடம் ஒப்படைத்து விடுதல் வேண்டும். (இக்கருத்தை மனத்துட்கொண்டே ரோமானியர் பல வகையான அலுவல்களையும், நிறுவனங்களையும் அமைத்தனர்; இதனைப் பின்னர் விவரமாகக் குறிப்பிடுவோம்.)

(2) அவ்வாறு ஒருவரிடத்து அவருடைய சிறப்பான ஆட்சித் திறமையைக் குடிமக்கள் மதித்து, ஆட்சி அதிகாரத்தையும், ஆட்சிப் பொறுப்பையும் ஒப்படைத்த பின்னர், ஆட்சி அலுவல்களில் குடிமக்கள் பங்கு எடுத்துக்கொள்ளாமல் அதனின்றும் விலகி இருத்தல் வேண்டும். (இத்தகைய ரோமானிய அரசியல் கருத்து அதீனியருடைய அரசியல் கருத்தினின்றும் முற்றிலும் மாறுபட்டது என்பது தெளிவாக நமக்குத் தெரியவரும்)

(3) அரசாங்க வகைகளைப் பற்றிய கொள்கைகளில் (forms of Govenment) ரோமானியருக்கு அதீனியருக்கு இருந்ததைப் போன்று அவ்வளவு அழுத்தமான ஈடுபாடு கிடையாது. எந்த வகையான ஆட்சி, ஒழுங்கையும் சட்ட விதிகளையும் அடிப்படையாகவும், குறிக்கோள்களாகவும் கொண்டு இயங்குகிறதோ அந்த ஆட்சியையே அவர்கள் விரும்பினர்.

மூன்றாவதாகக் கூறப்பட்ட குறிப்பைப் பார்க்கும்போது, ரோமானியருக்குக் கிரேக்கரைப் போலக் குடியாட்சிக் கோட்பாட்டில் அழுத்தமான ஈடுபாடு இல்லாமை ஒருபுறம் தெளிவாகக் காணப்படுவதோடு, ஒழுங்கு முறை, கட்டுப்பாடு, சட்ட அமைப்பு முதலியவற்றில் பொதுவாக அவர்களுக்கு இருந்த ஈடுபாடும் நன்கு வெளிப்படுகிறது. இதிலிருந்து, ரோமானியர் தற்கால உலக நாகரிகத்துக்குச் சட்டம் பற்றிய துறையில் செய்து காட்டிய பெருஞ் செயல்களுக்கு அல்லது சாதனைகளுக்கு நாம் காரணம் கண்டுபிடிக்க முடியும். ரோமானியர் விட்டுச் சென்ற சட்டத் தொகுப்பே அவர்கள் உலகுக்கு அளித்த ஓர் பெருஞ் சொத்து ஆகும். இடைக்காலத்திலும் (Middle Ages) தற்காலத்திலும் தோன்றிய குடியாட்சி இயக்கங்களை உருவாக்கிய கொள்கைகளுக்கு அடிப்படை ரோமானியச் சட்டத்தின் அடிப்படையில்தான் நாம் காணலாகும். ரோமானிய சட்டத்தை அமைத்த ரோமானிய சட்ட அறிஞர்கள் (Roman Jurists), 'அரசு' (State) என்பது அதில் வாழும் ஒவ்வொரு குடிமகனுடைய உரிமைகளையும் நன்கு காத்து அளிப்பதற்காகவே உள்ளது, என்ற குடியாட்சிக் கருத்தில்தான் அமைத்தனர்.

(தொடரும்)

# பிறப்பு, விடுதலை பற்றிய கருத்துக்கள் வலியுறுத்தப் பெற்றது ஏன்?

[தவத்திரு அடிகளார் அவர்கள் திருச்சி தேவர்மன்றத்தில் "மண்ணும் விண்ணும்" என்ற தலைப்பில் ஆற்றிய தொடர் சொற்பொழிவு. சென்ற வாரத் தொடர்ச்சி.]

நமது ஆன்மா குடியிருக்கின்ற வீடு நமது உடலம்; இந்த வீடுதோறும் இறைவன் எழுந்தருளிப் பொற்பாதம் காட்டுகின்றான் என்கிறார் மாணிக்கவாசகர்; இவ்வுலகில் எத்தனை வகை—கோடானுகோடி உயிர்கள் இருக்கின்றனவோ அத்தனை கோடி உயிர்களிலும் இறைவன் எழுந்தருளிப் பொற்பாதம் காட்டுகின்றான் என்பதே இதன் பொருள். நாம் கணக்கில் எடுத்திருக்கும் உயிர்வர்க்கங்கள் மிக மிகக் குறைவு. புழு வகைகளிலே எத்தனை ஆயிரம்! பூச்சி வகைகளிலே எத்தனை ஆயிரம்! ஏதோ பருத்துத் தெரிகின்ற ஆடு மாடு கோழிகள்தாம் நமக்கு நினைவுக்கு வருகின்றன. இவற்றையெல்லாம் கடந்து நிற்கின்ற உயிரினங்களுக்கு நாம் கணக்கெடுத்தபாடில்லை. அதனால்தான் துறந்தார் பெருமையைக் கூற வந்த திருவள்ளுவர், 'துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து இறந்தாரை எண்ணிக்கொண்டற்று' என்று குறிப்பிட்டார்.

இந்த உலகில் உள்ள கோடானுகோடி உயிர் வர்க்கங்களின் வீடுகள் -உடல்கள் இருக்கின்றனவே, அந்த உடல்களில் உயிருக்கு உயிராக நின்றுகொண்டு இறைவன் வாழ்த்துக் கூறுகிறான் என்ற பொருள்பட நமது மாணிக்கவாசகர் பேசுகின்றார்.

இடைக்கால உலகத்தில், இந்தப் பிறப்பு கொடுமையானது — ஆபத்தானது—இதிலிருந்து விடுதலைபெற வேண்டும் என்ற உணர்ச்சியே வளர்ந்து வந்திருக்கிறது.

பயிர் எப்பொழுது வளர்கிறதோ அப்பொழுதே களையும் முளைக்கிறது. எப்பொழுது உடல் பெருக்கிறதோ அப்போதே நோயும் வளர்கின்ற சில உடற்புலைப் பார்க்கிறோம். ஒரு நாட்டில் ஒரு கருத்துத் தோன்றி வளர்ந்தால் அதற்கு மாறான-எதிரிடையான ஒரு கருத்தும் தோன்றி வளர்வது இயற்கை-ஆனால் எது சரி என்பதை நாம்தான் தேர்ந்தெடுத்துக்கொள்ள வேண்டும். இப்படிப் பிறப்பைப் போற்றிய காலத்திலேயே பிறப்புக்கு எதிரிடையான கருத்துக்களை நாட்டிலே பரப்பிய இலக்கியங்களும் உண்டு. 'இழி தகைமையுடைய பிறப்பு - இப்பிறப்பிலிருந்து சீக்கிரம் விடுதலைபெற வேண்டும்' என்ற கருத்து சமண முனிவர்களாலே - பௌத்த முனிவர்களாலே - மாயாவாத நிபுணர்களாலே இந்த உலகத்தில் பரப்பப்பட்டிருப்பதைப் பார்க்கிறோம். சிலபொழுது நம் திருமுறைகளில்கூட அந்தக் கருத்துக்கள் வலியுறுத்தப் பெறுவதைப் பார்க்கிறோம். இக்கருத்துக்கள் வலியுறுத்தப் பெற்றதன் நோக்கம், இவ்வுடம்பு நிலையில்லாதது என்பதாலே இப்பொழுதே நீ அதை அழித்துவிடு என்பதல்ல. நீ நினைப்பதற்கும் பேசுவதற்கும், சிந்திப்பதற்கும் செய்வதற்கும் காரணமாகிய இந்தப் பிறப்பு இருக்கிறதே இது நிலையில்லாமல் ஓடிக்கொண்டேயிருக்கிறது-இது ஓடி முடிவதற்கு முன்னாலேயே நீ உரிய காரியத்தைச் செய்து முடிப்பதிலே, சுறுசுறுப்பாக இரு என்பதற்காகவேயாம். காவிரிக் கரைக்குப் போய் ஆற்றிலே குதித்து இந்த உடலை அழித்துவிடுவது நல்லது என்ற கருத்தை வலியுறுத்துவதற்காகச் சொன்னதல்ல. பிறப்பு நிலையாமை பற்றிய கருத்து. அறிவுக்கேற்றவாறு, கொள்வோர் தகுதிக்கேற்றவாறு நீதிகள் வற்புறுத்தப் பெறுவது இயற்கை. கொஞ்சம் தரமாகச் சிந்திப்பவர்கட்கு இப்படி விரிவாகச் சொல்ல முடியும். 'அப்பா இந்த உலகம் நிலையில்லாதது—உலகம் இருந்துகொண்டேயிருக்கிறது - என் அப்பன் காலத்திலிருந்தது- பாட்டன் காலத்திலிருந்தது- அப்பர் காலத்திலிருந்தது- திருஞானசம்பந்தர் காலத்திலிருந்தது - புத்தர் காலத்திலிருந்தது- ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக இந்த உலகம் இருந்துகொண்டேதான் இருக்கிறது -பொதியை வளர்கிறது- இமயம் வளர்கிறது. காவிரிப் பேராறு ஓடிக்கொண்டிருக்கிறது- கங்கைப் பேராறு ஓடிக்கொண்டிருக்கிறது. இளங்கோவடிகள் 'காவிரி போற்றுதும்' என்று பாடுகிறார். இளங்கோவடிகள் காலத்திலும் காவிரி ஓடிக்கொண்டிருந்தது. அகத்திய முனிவர் தென்னகத்திற்கு வந்த காலத்

வணக்கம்

# மரக்குலமே!

--கவிஞர் ரா. பொன்ராசன்--

1

உலகில் உள்ள மரங்களே
உமக்குக் கோடி வணக்கங்கள்;
பலவும் நும்மில் பாடங்கள்
படிக்க வேண்டும் மனிதர்கள்!

2

தீமை செய்யும் கயவர்க்கும்
தேர்ந்து நன்மை செய்கிற
மேன்மை கொண்ட மனிதர்கள்
மிகச் சிலரே உலகினில்!

3

தம்மை வெட்டு வோரையும்
தாங்கி நிழல் தருகிற
செம்மை மிக்க மரங்களே
ஜெகத்தில் மிக அதிகமாம்!

4

உயிர் துறந்த பின்னரும்
உலகுள் ளோருக் குதவிடும்
உத்த மர்கள் மனிதரில்
ஒரு சிலரே இருப்பராம்

5

பட்டுப் போன பின்னரும்
பல வகையாய்ப் பயன்படும்
மெத்த நல்ல மரங்களே
மேதி னியில் அதிகமாம்!

6

ஆ றறிவுத் திறத்தினல்
அவனி முற்றும் அழித்திடும்
பே ரறிவு பெற்றஎம்
பெரிய பெரிய மனிதர்கள்—

7

செத்தும் பிறர்க் குதவிடும்
செம்மைப் பண்பு நலத்தினை
சற்று நும்மில் கற்றிடின்
சாந்தி எங்கும் நிலவுமாம்!

8

இதனை எல்லாம் உணர்ந்துதான்
எங்கள் நாட்டு ஞானிகள்
தவ மிருக்க நும்மடி
தஞ்ச மென்று சார்ந்தரோ?

(முதற்பக்கத் தொடர்ச்சி)

ளுதல் வேண்டும். அவன் நச்சுத்தன்மையுடைய பாம்புகளை அணிந்திருக்கிருன். அதுபோல நம்முடைய நச்சுத்தன்மையையும் பொருட்படுத்தாமல் ஏற்றருள் செய்வான். நச்சரவத்தையும் அடக்கி ஆட்கொண்டருளினமையால் புனிதன் ஆகின்ருன் இறைவன். இத்தகு திருவாரூர் தியாகேசனை வாழ்த்தி வணங்கி வாழ்ந்தால் பொழில் செழித்து நிற்பதுபோல வாழ்க்கையும் செழிக்கும்.

ஆம், அப்பரடிகள் வாக்காலேயே இதனை நாம் காண்போம்:

"பற்றிநின்ற பாவங்கள் பாற்ற வேண்டின்
பரகதிக்குச் செல்வதொரு பரிசு வேண்டின்
சுற்றிநின்ற சூழ்வினைகள் வீழ்க்க வேண்டின்
சொல்லுகேன் கேள்நெஞ்சே! **துஞ்சா வண்ணம்**
**உற்றவரும் உறுதுணையும்** நீயே என்றும்
**உன்னையலால் ஒருதெய்வம்** உள்கேன் என்றும்
**புற்றரவக் கச்சார்ந்த** புனிதா என்றும்
**பொழில்ஆரூ ராஎன்றும்** போற்று நில்லே.

## அடிகளார் சுற்றுப்பயணம்

| | | | |
|---|---|---|---|
| 1965. | ஏப்ரல் | | |
| 5 | இரவு | 7 | சேலம். தைத்தறி வாரவிழா |
| 6 | காலை | 10 | குன்றக்குடி, பால்பண்ணைக் கூட்டம் |
| | மாலை | 5 | குன்றக்குடி, கிரிடிட்யூனியன் கூட்டம் |
| 7 | மாலை | 3 | வள்ளியூர், உயர்நிலைப் பள்ளி |
| | மாலை | 4½ | இராதாபுரம் உயர்நிலைப் பள்ளி |
| | இரவு | 8 | வடக்கன்குளம் |
| 8 | முற்பகல் | | களக்காடு |
| | இரவு | 7 | கோவில்பட்டி |
| 9 | முற்பகல் | | நெல்லை |
| | மாலை | 6 | நெல்லை, கைத்தறி வார கண்காட்சிவிழா |
| | இரவு | 7½ | நெல்லை, சன்மார்க்க சங்க ஆண்டு விழா |
| 10 | திருச்சி, | | அருள்நெறித் திருக்கூட்ட ஆண்டு விழா |
| 11 | திருச்சி, | | திருவாசக விழா |



வெளியிடுவோர், ஆசிரியர்: ஆறு. சுப்பிரமணியன், அடிகளார் அச்சகம், குன்றக்குடி, இராமநாதபுர மாவட்டம் துணை ஆசிரியர்: சாமி பழனியப்பன்.